உ

ஓம்

தத்ஸத் ப்ரஹ் மனே நம :



ஸ்ரீ வித்தியாரண்ணிய ஸ்வாமிகள் இயற்றிய

# பஞ்சதசப்பிரகரணம் முதல் வாசகம்

# தத்துவ விவேகாதி ஐந்து பிரகரணங்கள்

வெளியிட்டோர் :

திரு. எ. சா. வேலாயுதராஜா அவர்கள்

இராஜபாளையம்

6—8—1993

உ

ஓம்

தத் ஸத் ப்ரஹ்மனே நம :

சதுர்வேத பாஷிய கர்த்தாவாகிய

ஸ்ரீ வித்தியாரண்ணிய சுவாமிகள்

அருளிச்செய்த

# பஞ்சதசப்பிரகரணத்திலிருந்து தத்துவ விவேகாதி ஐந்து பிரகரணம் மட்டும் பதிக்கப்பெற்று.



ஸ்ரீலஸ்ரீ ஸ்ரீமகா கோவிந்த சுவாமிகள் இரண்டாவது ஆண்டு மகாசமாதி குருபூஜை (6-8-93) நாளில் ஞாபகார்த்தமாக (நினைவு மலராக) ஸ்ரீ சற்குருவின் பாத சேகரர் திரு. **எ. சா. வேலாயுதராஜா** அவர்களால் பதிப்பித்து வெளியீடு செய்யப்பெற்றது.



**விடை :** 4. மும்மூர்த்திகண் முதலான தேவதைகளிடத்திலும், மனிதர்மிருகமுதலிய விடங்களிலும் சைதன்னியமொன்றேயொழிய விரண்டில்லை.

***வினா :*** 5. இப்படி முந்தியவாக்கியத்தினால் ஞான நிர்ணயமானால்; மற்ற மூன்று வாக்கியத்திற்கு மர்த்தம் யாது ?

**விடை :** 5. பரிபூரணமாயிருக்கும் பரமாத்மாவே இந்தத் தேகத்தில் புத்திக்குச்சாக்ஷியாயிருக்கும் சைதன்னியம். இப்படித்தானாகவிருக்கும் பிரஹ்மமே அஹமென்று யசுர்வேதஞ் சொல்லாநின்றது. சீவனுடைய தேகேந்திரியாதிகட் கப்பாற்பட்டிருக்கிற வஸ்து இந்தப் பிரஹ்மமாதலின், நீயே சகத்காரணப் பிரஹ்மமென்று சாமவேதஞ் சொல்லாநின்றது. இப்படிச்சுயம்பிரகாசமாகவிருக்கிறவாத்மாவே பிரஹ்மமாம். வேறன்றென்றதர்வணவேதஞ் சொல்லாநின்றது.

*ஐந்தாவது மஹாவாக்கிய விவேகம் முற்றிற்று*

ஆக வினா விடைகள்-5

---





11-4

உ

ஓம்

தத் ஸத் ப்ரஹ்மனே நம:

சதுர்வேத பாஷிய கர்த்தாவாகிய

ஸ்ரீ வித்தியாரண்ணிய சுவாமிகள்

அருளிச்செய்த

பஞ்சதசப்பிரகரணத்திலிருந்து தத்துவ விவேகாதி

ஐந்து பிரகரணம் மட்டும் பதிக்கப்பெற்று.



ஸ்ரீலஸ்ரீ ஸ்ரீமகா கோவிந்த சுவாமிகள் இரண்டாவது ஆண்டு மகாசமாதி குருபூஜை (6-8-93) நாளில் ஞாப கார்த்தமாக (நினைவு மலராக) ஸ்ரீ சற்குருவின் பாத சேகரர் திரு. எ. சா. வேலாயுதராஜா அவர்களால் பதிப்பித்து வெளியீடு செய்யப்பெற்றது.



ஓம்

பவசங்கரதேசிகமே சரணம்



**ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்**

*யோக வேதாந்த ஆச்சாரியாள்*

ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்

அவனியாபுரஞ்சாலை, தெற்குவாசல்,

மதுரை—12.

ஓம்

## முகவுரை

மகா கோவிந்த சுவாமிகளின் மகிமையும் பஞ்ச தசியின் சுருக்கமும்.

சுவாமிகளின் பிறவி அறிவதற்கரியது. அவர் தோன்றியது அரசர் குலத்தில். முன் செய்த வினையின் பயனாக அவர்க்கு இளமையிலேயே வைராக்கியம் உண்டாயிற்று. அவர் செய்த தவப்பயனாக பிள்ளைப் பருவத்தில் அவர் இதயத்தில் வேதாந்த வேட்கை உதயம் ஆயது. ''ஆயத்தக்கது வேதத்தின் அந்தம்'' வலிமை யான அறிவுடைய மனிதர்கள் விசாரிக்க வேண்டியது அதுவே என்பது பொருள்.

மேற்கூறிய வாக்கியத்தின்படி அவர் உள்ளத்தில், வேதாந்த வெள்ளம் பொங்கி வழிந்தது. அதை முறைப் படி கற்றுக்கொள்வதற்காக கோவிலூர் என்னும் புனித ஸ்தலத்திற்கு விரைந்தார். ஆண்டுபலகாலம் ஆன்மீகக் கல்வியைப் பயின்று அத்வைதத்தில் திகழ்ந்தார். ஞான வைராக்கிய நிலையமாக அவர் விளங்கினார்.

## சந்நியாசம்

பிரம்மச்சரிய ஆஸ்ரமத்தில் இருந்து விதிப்படி சந்நியாசம் அடைந்தார். கோவிலூரிலிருந்து வெளியேறி கிராமந்தோறும் சென்று வேதாந்த பிரசாரஞ் செய்து வந்தார். அங்ஙனம் இருப்ப. நன்னிலம் சென்று நாராயண குருவைய்யும், தாண்டவராய சுவாமிகளையுந் தெரிசித்து அவர் இருவருக்கும் பக்தர்கள் உதவியைக் கொண்டு ஓர் ஆலயம் உருவாக்கினார்.

## கொப்பமாபுரி அடைதல்

மீண்டும் ஸ்ரீ அரங்கநாதரைத் தெரிசித்து அங்கிருந்து கொப்பமாபுரியை அடைந்தார். அவ்வூரில் பெருஞ்செல்வந்தர் ஸ்ரீ நடராஜ ரெட்டியார் அவர்களும் அவர் பாரியாள் ஸ்ரீமதி ருக்மிணி அம்மையாரவர்களும் இவரைக் குருவாகக் கொண்டு பேணி வந்தனர். இவர் அங்கிருந்து பல நூல்களை இயற்றியும் சிஷ்யர்களுக்கு பாடம் போதித்து வருங்காலத்தில் பிரஜோத்பத்தி ஆண்டு ஆடித் திங்கள் 14ம் நாள் (30-7-91) செவ்வாய்க்கிழமை கிருஷ்ண பக்ஷம் சதுர்த்தி திதி பூரட்டாதி நட்சத்திரம் கூடிய நன்னாளில் இரவு 1-00 மணியளவில் விதேக கைவல்யம் அடைந்து ௸ ஊரில் கோவில் கொண்டுள்ளார்கள். மேற்படி கோவிலில் நித்திய பூஜைகளையும், மற்ற கைங்கரிய காரியங்களையும் ஸ்ரீரங்கம் திருமதி. ஸ்ரீ ஞானச்செல்வி யசோதை அம்மையார் அவர்கள் செய்து வருகிறார்கள்.

இஃது இங்ஙனம் இருப்ப இராஜபாளையம் ஸ்ரீமான் எ. சா. வேலாயுதராஜா அவர்கள் உன்னதமானவர்கள். வேதாந்தப் பிரியம் உடையவர்கள். அவர்கள் எளிய முறையில் இனிய வேதாந்தத்தைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்னும் பெரும் நோக்கோடு ஸ்ரீ வித்தியாரண்ணிய சுவாமிகள் அருளிய ஸ்ரீ பஞ்சதசியின் முற்பகுதியில் உள்ள தத்துவ விவேகம் பஞ்சபூத விவேகம், பஞ்சகோச விவேகம், துவைத விவேகம், மகாவாக்கியம் விவேகப் பிரகரணங்கள் ஐந்தும் வினா விடையாக வகுத்தும், தொகுத்தும் செய்திருப்பதை பிறர் வேண்டுகோளின்படி அதை அங்குள்ள முமுட்சுகளிடம் காட்டினார்கள். அவர்கள் அதை அவசியம் அச்சில் கொடுத்து புத்தகமாக்கினால் பலருக்கு உபகாரமாகும் என்று சொல்ல, அதற்கு மேற்படியார் புத்தகமாக்கியிருக்கிறார்

ஞானதான சமம் லோகே ந வித்தியதே முனி சத்தம;
தேந தாநேந ஞாநேந தரந்தி பவசாகராத்.

| | | |
|---|---|---|
| ஹே முநிசத்தம | = | முனிகளில் சிறந்தவரே |
| லோகே | = | உலகத்தில் |
| ஞானதானசமம் | = | ஞானதான சமத்திற்கு (போல) |
| நவித்யதே | = | இல்லை<br>ஒருதானமுங்கிடையாது |
| தேநதானேன ஞானேன | = | அத்தகய ஞானதானத்தால் |
| தரந்தி பவசாகராத் | = | சம்சாரக் கடலிலிருந்து |
| தரந்தி | = | கரையேறுகிறார்கள் |

ஞானிகள் என்ப கருத்து

ஸ்ரீ குரு பக்தர்களுக்கு பகவத் பாதாள் பகவான் சங்கரர் அருள் புரிவாராக.

இதை எழுதியவர்
சுவாமி யோகானந்த கிரி வேதாந்த ஆசாரியாள்
தலைவர், ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள் மடாலயம்
அவனியாபுரஞ்சாலை, மதுரை-625 012.

—சுபம்—

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 10 | னர்ம்பிகை | னம்பிகை |
| 1 | 19 | தாக்கிக் | பதந்தாக்கி |
| 2 | 12 | அந்தக்கரமுடை | அந்தக்கரணமுடை |
| 3 | 10 | னால் | யினால் |
| 4 | 4 | லக்ஷ்ணம் | லக்ஷணம் |
| 4 | 9 | சூன்யமாய்ப் போமன்று | சூன்யமாய்ப் போமென்று |
| 5 | 8 | ஒரொரு | ஒரொரு |
| 6 | 11 | மர்துடர்கள் | மாநுடர்கள் |
| 7 | 26 | நாமென்றும் | நாமென்று |
| 9 | 4 | பொருனில் | பொருளில் |
| 12 | 12 | அல்லலென்பது | அல்லனென்பது |
| 22 | 27 | ஆகையா விலையெல்லாம் | ஆகையால் இவையெல்லாம் |
| 23 | 6 | இதுவெணக்கப்படாமற் | இதுவெணக்ககப் படாமற் |
| 23 | 12 | பிண்டமோசுவர | பிண்டமே ஈசுவர |
| 25 | 23 | அதலாற் | ஆதலாற் |
| 25 | 30 | அத்துவைதம் | அத்வைதம் |
| 26 | 9 | அத்வை | அத்வைத |
| 26 | 29 | பிரபஞ்மெல்லாம் | பிரபஞ்சமெல்லாம் |
| 27 | 21 | சதுர்யுகர் | சதுர்யுகம் |
| 29 | 16 | வடிவாயியிருப்பதே | வடிவாயிருப்பதே |



ஓம்

சிவமயம்

ஓம்தத்ஸத் பரப்பிரஹ்மணே நம :

ஸ்ரீ விநாயகர் ஸ்துதி

ஆரண மதிலுறை யகண்ட மாம்பரி
பூரண சொரூப மெய்ப் பொருளெலாவற்றின்
காரண மெனப்புகல் கருணை வாரிதி
வாரண முகன்றனை வணங்கி வாழ்த்துவாம்.

காப்பு

ஆனைமுக னாறுமுக னாம்பிகை பொன்
னம்பலவன் ஞானகுரு வாணியையு னாடு

ஸ்ரீ குரு துதி

இருவிழிகள் உலகறிந்தும் தனையறியாதது போல்
இயானறியும் பொருளலதிங் கெனையாறிமையினால்
கருவிடைபுக்கின்பதுன்பக்கடலிடையே சுழன்று
கண் கலக்கப்படுவேனைக் கருணை விழியதனால்
அருவினைகள் அற நோக்கி ஆணவமே போக்கி
அகமக மென்றிருந்தவெலாம் அறிவு கொடே நீக்கீப்
பருவமதிற் தாக்கிக் கற்பனைகள் இயாவும்
பழாக்கித்தா னாக்கும் பரகுருவைப் பணிவாம்.

## முதலாவது தத்துவவிவேகம்

### குருஸ்துதி

வித்தியாரண்ணியஸ்வாமிகள்,லோகாநுக் கிரகார்த்த மாக வேதாந்த சித்தாந்தமாகிய தத்துவ விவேகத்தை வெளியிட 'ஆதியில் சிஷ்டாசாரமாய்க் குருவின் நமஸ்காரம் செய்கின்றார் :—

அநேகவித லக்ஷண விஸ்தாரத்துடன் கூடியிரா நின்ற மஹா மாயாமோஹத்தை எந்நேரமும் எடுத்து விழுங்குவதே வேலையாயுள்ள ஸ்ரீ சங்கராசாரிய குரு மூர்த்திகளின் பாதார விந்தங்களுக்கு நமஸ்காரம்.

அந்தக் குருமூர்த்திகளின் பாதாரவிந்த சேவை யினால் நிர்மலமான அந்தக்கர முடையவர்களுக்குப் பரமாத்மாவை யெளிதாய்க் கண்டறியுமாறு தத்துவ விவேகம் சொல்லப்படுகின்றது.

*வினா* : 1. தத்துவம் யாது? அதத்துவம் யாது? விவேகம் யாது?

*விடை* : 1. தத்துவமாவது பரமாத்மா, அதத்துவ மாவது மாயாதற்காரியம், இதனைப் பகுத்தறிவதே விவேகம்.

*வினா* : 2. பகுத்தறிவதெப்படி ?

*விடை* : 2. அறிவாயிருப்பது இது, அறியப்படுவது இது வென்று காண்பதே பகுத்தறிதலாம்.

*வினா* : 3. அறிவு எத்தனை விதமாயிருக்கும்?

*விடை* : 3, அறிவாயிருக்கிற ஆத்மா ஒன்றேயாம்.

*வினா* : 4. அறியப்படுவது எத்தனை விதமாயிருக் கும்?

*விடை* : 4. அறியப்படுவது ஸ்திரமென்றும், அஸ்திர மென்றும், மூலாஞ்ஞான இருளென்றும் திரிவிதமாயிருக் கும்.

*வினா* : 5. அறிவு ஒன்றென்பதையும், அறியப்படுவது மூன்றென்பதையுந் தெரிவதெப்படி?

*விடை* : 5. விஷயங்கள் சாக்கிரத்தில் ஸ்திரமும், சொப்பனத்தில் அஸ்திரமும், சுழுத்தியில் அந்தகாரமுமாக மூன்று விதமாக இருக்கும். இவைகளைத் தினந்தோறும், மாதந்தோறும், வருஷந்தோறும், கற்பந்தோறும் அறிந்துகொண்டிருக்கும் அறிவு அந்த விஷயங்களைப்போல வொருகாலத்துந் தோன்றியழியாமையினால் ஆத்மா ஒன்றேயொழிய இரண்டில்லை.

*வினா* : 6. இவற்றில் ஆனந்தமாய் நாடவேண்டிய பொருள் யாது? தள்ளவேண்டிய பொருள் யாது?

*விடை* : 6. மூன்றவஸ்தையிலுங்காணப்பட்ட பொருள்கள் யாவுந் தனக் கன்னியமானபடியினால் தள்ள வேண்டியது; அறிவாயிருக்கிற தான் கைவிடப் படாததாகலின் ஆநந்தமாக நாடவேண்டியதாம்.

*வினா* : 7. இப்படி அறிவாயிருக்கிற பொருள் எக்காலத்திலுந் தானாகவேயிருக்குமானால், அஞ்ஞான காலத்தில் அறியப்படாமலிருப்பது என்னை?

*விடை* : 7. சகபாடிகளுடன் கூடி ஓதுகின்ற தன் பிள்ளையின்குரல் தெரியாததுபோல, அநாதிசித்த அஞ்ஞானத்துடன் கூடிக்கலந்து தோற்றுதலால் தோற்றாமலிருந்தது.

*வினா* : 8. அநாதி சித்த அஞ்ஞானம் யாது?

*விடை* : 8. அக்கினியிற் சூடுபோலவும்; சலத்திற் சைத்தியம் போலவும், பிரஹ்மத்தில் சீவன், சகத்து, ஈசுரனை உண்டாக்கும் மூலப்பிரகிருதியே அநாதி சித்த அஞ்ஞானம்.

*வினா* : 9. இந்த அஞ்ஞானம் எதிலுண்டாயிற்று ?

விடை : 9. இரச்சுவில் சர்ப்பந் தோன்றினாற்போல, பிரஹ்மத்தில் உண்டாயிற்று.

வினா : 10. இதற்கு லக்ஷணம் யாது ?

விடை : 10. சத்துமன்று, அசத்துமன்று, ஒன்று மன்று, பலவுமன்று, சாவயவமுமன்று, நிரவயவமு மன்று, சாவயவ நிரவயவமுமன்று, பிரமாணமாகியு மிருக்கும், அப்பிரமாணமாகியுமிருக்கும் விசாரித்துப் பார்க்குமிடத்தில், லக்ஷண சூன்யமாய்ப்போமன்று வேதஞ்சொல்லுவதே லக்ஷணம்.

வினா : 11. இப்படி யுண்டாகிய பிரகிருதி என்ன செய்யும்?

விடை : 11. தன்னுடைய முக்குணத்தினால் சீவன் ஜகத்து ஈசுரனை உண்டாக்கும்.

வினா : 12. இவை எதனாற் போம்?

விடை : 12. பிரஹ்மம் நாமென்னும் அத்வைத ஞானத்தினாற் போம்.

வினா : 13. மூலப்பிரகிருதி முக்குணத்தினால் சீவன், சகத்து, ஈசுரனை யுண்டாக்கினவிதம் எப்படி?

விடை : 13. மூலப் பிரகிருதியின் சாத்வீக குணமான சுத்த மாயையினிடத்தில் பிரதிபிம்பித்தவன் ஈசுவரன், பஞ்ச கிருத்தியபரராயிருக்கும் இந்த அந்தரியாமியை யுண்டாக்கும் மாயையே அவருக்குக் காரண சரீரம், ராஜத குணமென்னும் அசுத்த மாயையான அவித்தை யில் பிரதிபிம்பித்த சைதன்னியம் சீவன். இந்தப் பிராஞ்ஞனுக்குக் காரணசரீரமான அவித்தை தாரதம்மிய மாய் வெகுவிதமாயிருத்தலின் சிதாபாசர்களும் அநந்தம். தாமதகுணப் பிரகிருதியிலிருந்தும் இந்தச் சீவர்களுக்கு போக்கியபோக விதிகளை யுண்டாக்க ஈசுராக்கினை யினால் ஆகாசம் வாயு அக்கினி அப்பு பிருதிவி என்னப்

பட்ட முக்குணத்துடன் கூடிச் சூக்ஷ்மபூதம் ஐந்தும் உண்டாயின. இந்தப்பூதங்களின் சாத்வீகாம்சத்தில் பூதத்திற் கோரொருமாத்திரை யெடுத்து ஒன்றாகக் கூட்டிவைத்தது அந்தக்கரணம். இது சஞ்சல வியாபாரத் தினால் மனமென்றும், நிச்சய வியாபாரத்தினாற் புத்தி யென்றும் இரண்டு விதமாக விருக்கும். மற்றும் சாத் வீகாம்சத்தில், பூதத்திற்கு ஒரொரு மாத்திரை யெடுத் துத் தனித்தனியே வைத்தது சுரோத்திராதி ஞானேந் திரியம். பூதங்களின் ராஜசாம்சத்தில் பூதத்திற்குகோ ரொருமாத்திரை யெடுத்து ஒன்றாகக் கூட்டிவைத்தது வியானாதி பஞ்சவாயுக்கள். மற்றும் ராஜசாம்சத்தில் பூதத்திற் கோரொருமாத்திரை யெடுத்துத் தனித்தனியே வைத்தது வாக்காதி கர்மேந்திரியம், ஆக இந்தப் பதி னேழு தத்துவமும் இலிங்க சரீரமென்றும், சூக்ஷ்ம சரீர மென்றும், போகசாதன மென்றுஞ் சொல்லப்படும். இந்தச் சூக்ஷ்ம சரீரத்துடன் கூடின அவித்தையாப் பிரதி பிம்பருக்குப் பிராஞ்ஞரென்னும் பெயர் மாறித் தைஜசர் என்னும் பெயர் உண்டாயிற்று. சகல சீவர்களுடைய சூக்ஷ்ம சரீரமும் சூக்ஷ்ம பூதமுங் கூடின சமஷ்டி புத்தி யினால் இரண்ய கர்ப்பமென்றும், ஈசுர சூக்ஷ்ம சரீர மென்றுஞ் சொல்லப்படும். இந்தச் சூஷ்ம சரீரத்துடன் கூடின மாயாப் பிரதிபிம்பருக்கு அந்தரியாமி யென்னும் பெயர் மாறிச் சூத்திராத்மா வென்னும் பெயர் வந்தது. எங்குந் தாதாத்மியமா யிருந்தபடியினால் இவரைச்சமஷ்டி யென்பர்; அவனவன் சரீரத்தில் மாத்திரந் தாதாத்மிய மாக விருந்தபடியினாற் சீவர்களை வியஷ்டியென்பர். சீவர்களுக்குப் போகமும் போகத்துக்கு இடமான ஸ்தூல சரீரமும் உண்டாக்கும் பொருட்டுத் தாமத குணமாயிருக் கும் ஆகாசாதிகளைப் பஞ்சீகரணம் பண்ணினார். அதெங்ஙன மெனின் பஞ்சபூதம் ஒவ்வொன்றையும் இரண் டிரண்டாக்கி முதற்பாதி ஐந்தையும் ஒவ்வொன்றை நந் நான்காக்கிப் பூதங்களின் இரண்டாம் பாதி ஐந்தில் தன் னம்சத்துடன் சேர்க்காமல் மற்ற நாலு பூதங்

களுடனும் சேர்ப்பது பஞ்சசீகரணம். இப்படிப் பஞ்ச சீகரணம் பண்ணின ஸ்தூல பஞ்சபூதங்களில் அண்டங்களும், புவனங்களும், நால்வகை ஸ்தூல சரீரங்களும் போக முதலான வஸ்துக்களும் உண்டாயின. இந்த ஸ்தூல பூத பௌதிகங்கள் எல்லாம் ஒருமைப்பாடாய் ஈசுவர ஸ்தூல சரீரமென்றும் விராட்டென்றுஞ் சொல்லப் படும்; இதனுடன் கூடின ஈசுவரனுக்குச் சூத்திராத்மா வென்னும் பெயர் மாறி வைசுவா நரனென்னும் பெயர் வந்தது. தைஜசர்கள் எல்லாம் ஸ்தூல சரீரங்களுடன் கூடி விசுவர்களாய்த் தேவதைகள் என்றும், மாதுடர்கள் என்றும், திரியக்கென்றும் பெயரையுடையவ ரானார்கள். ஈசுவர வாக்கியமான கர்மம், பக்தி ஞானம் என்னும் காண்டத்திரயாநுஷ்டானம் பண்ணி அந்தர்முகர் ஆகாமல் பகிர்முகர் ஆனார்கள். எல்லோரும் இப்படி ராகத் துவேஷபரராய்ப் பண்ணின கர்மத்தின் வசத்தினால் ஜன்ம பந்தங்களில் ஆற்றிற் சுழிவழியே சுற்றும் புழுப் போலச் சுழலுகிறார்கள். தயாளுவாய் இருப்பவன் அந்தப் புழுக்களைக் கரையேற்ற அவை மரத்தினீழலில் இருந்து சுகமடைவதுபோல, சத்கர்ம பரிபாகத்தினாற் குருரூபமாக வந்த ஈசுவரனுடைய ஞானோபதேசத்தினால் அபூர்வமாக ஒருவன் பஞ்சகோச விவேகத்தைப் பண்ணி முத்தியும் அடைவான்.

*வினா* : 14. பஞ்சகோசங்கள் எவை?

*விடை* : 14. ஸ்தூல சரீரமே அன்னமயகோசமும், கர்மேந்திரியமும், பிராணவாயுங் கூடிப் பிராணமயகோசமும், மனமும் ஞானேந்திரியமுங் கூடி மனோமயகோசமும் புத்தியும் ஞானேந்திரியமும் கூடி விஞ்ஞானமய கோசமுமாம். இந்தக் கோசத்திரயமே சூக்ஷ்ம சரீரமென்றுஞ் சொல்லப்படும். காரணசரீரமே ஆநந்தமயகோசமாம்.

*வினா* : 15 இந்தப் பஞ்சகோசங்களுடன் ஆத்மாவுக்குத் தாதாத்மியம் எப்படியுளது?

விடை : 15 நீலாதி வஸ்துக்களுடன் கூடி அந்தந்த வண்ணமாய்த் தோற்றும் படிகம் போல, ஆத்மாவாக விருக்கின்ற தானும் பஞ்சகோசங்களுடன் கூடி அவையே தானாகத் தோற்றுவது தாதாத்மியமாம்.

வினா : 16. இந்தப் பஞ்சகோசங்களைத் தானல்ல வென்று தள்ளும் விவேகம் யாது?

விடை : 16. அந்வயவெதிரேகமே அவற்றைத் தள்ளும் விவேகமாம்.

வினா : 17. அந்வயம் யாது? வெதிரேகம் யாது? விவேகத்தினால் பஞ்சகோசத்தைத் தள்ளி யப்பாற்பட்டிருக்கும் பிரஹ்மமே நாமென்றறியுந்தன்மை யாது?

விடை : 17. தானாக வழங்கும் ஸ்தூலசரீரந் தோற்றாத சொப்பனாவஸ்தையில் தான் தோற்றுவதே அந்வயம். தான் தோற்றினுந் தூலசரீரந் தோற்றாததே வெதிரேகம். சூக்ஷ்மசரீரந் தோற்றாத சுழுத்தியவஸ்தையில் தான் தோற்றுவதே அந்வயம். தான் தோற்றினும் இலிங்கசரீரந் தோற்றாததே வெதிரேகம். இந்தச் சூக்ஷ்ம சரீரந் தள்ளப்படவே மூன்றுகோசமுந் தள்ளப்பட்டன. சுழுத்தி தோற்றாத சமாதியில் தான் தோற்றுவதே அந்வயம். தான் தோற்றினுஞ் சுழுத்தி தோற்றாததே வெதிரேகம். முஞ்சிப்புல்லில் பக்கத்து மட்டைகளைத் தள்ளித் தள்ளி நடுவில் ஆணியெடுப்பதுபோல அந்வய வெதிரேக யுத்தியினால் தானாய் விளங்கும் பஞ்சகோசங்களைத்தள்ளி அப்பாற்பட்டிருக்கும் பிரஹ்மமே நாமென்றும் நிச்சயிக்கும் புத்தியுள்ளவர்களே பேரறிவாளர்.

வினா : 18. சீவனுக்கும் பரமாத்மாவிற்கும் இவ்வாறு ஏகத்துவஞ் சாதித்ததற்குப் பிரமாணம் யாது?

விடை : 18. சாமவேத மஹாவாக்கியமே பிரமாணம்.

வினா : 19. அந்த மஹாவாக்கியத்திற் கர்த்தம் யாது?

விடை : 19. முன் சுயம்பாகியா யிருந்தவனுக்குக் காலாந்ரதத்தில் துரைத்தனம் வந்து தண்டிகையில் வரக் கண்ட போது அவனென்னும் சொல்லில் சட்டுவமுத லான வுபாதிலக்ஷணத்தையும், இவனென்னும் சொல் லில் தண்டிகைமுதலான வுபாதி லக்ஷணத்தையும் விட்டு இரண்டு சொல்லிற்குஞ் சரீரமாத்திரத்தை அர்த்தமாகக் கொண்டு இவனே அவன், அவனே இவனென்று ஒரு வனைப் புரையறக் காட்டுவதுபோல, சகத்திற்கு உபா தான காரணமான பிரஹ்மம், மாயாசபளிதன்மான ஈசு ரன், தாமத பரிணாமமான அவரது சரீரம் என்னும் இம்மூன்றையுங் காட்டும் தற்பதம்; மலினசத்துவ அவித் தையா பிரதிபிம்பன், அவனது சரீர உபாதி, இவற்றிற்கு அதிஷ்டான கூடஸ்தர் என்னும் மூன்றையுங்காட்டுந் துவம்பதம். இவர்களிருவரையும் ஒன்றென்றும் மஹா வாக்கியம் இரண்டிடத்துமுள்ள வுபாதியையும் உபாதி யுடன் கூடின சைதன்னியத்தையும் விட்டு அகண்டமா யுள்ள சச்சிதாநந்தம் ஒன்றையே புரையறக்காட்டும். இவ்வர்த்தம் பாகத்தியாக லக்ஷணையான் விட்டு விடாத லக்ஷணையினாற் பெறப்படுகின்றது.

வினா : 20. இத்தன்மையான ஞானம் வருதற் பொருட்டுக் குருசந்நிதானத்தில் செய்காரியம் யாது?

விடை : 20. சிரவணாதிகளே செய்காரியம்.

வினா : 21. சிவரணாதி செய்காரியம் எத்தனை விதம் அவற்றிற்கு லக்ஷணம் யாது?

விடை : 21. சிரவணாதி நாலுவிதம். அதெங்ஙன மெனிற் சகல வேதங்கட்கும் ஆறு லிங்கத்தினா லர்த்த விசாரம் பண்ணிப் பிரஹ்மத்தில் தாற்பரியமெனக் காண்

பதே சிரவணம். அந்த யுத்தியினால் அநவரதஞ் சிந்திப்பதே மனனம், இப்படி யிருவகையினாலுந் தெளிந்த பொருளில் மனம் ஏகாக்கிரமாவதே நிதித்தி யாசனம். தியானம் பண்ணுபவனையும், தியானத்தையும் இழந்து தியானிக்கப்படும் வஸ்து மாத்திரமாயிருக்கும் சித்தமே சமாதி.

*வினா* : 22. இத்தன்மையான சமாதிக்குப் பலன் யாது?

*விடை* : 22. அநாதிகால சஞ்சிதகர்மநாசமும், தன்னை நிர்மலம்பண்ணும் தர்மமும், வாசனாக்ஷயமும், அபரோக்ஷ ஞானமுந் தனக்குப் பிரயோசனம்.

*வினா* : 23. இந்த அதீத சுகசமாதியில் இருப்பவன் அப்படியே யிராமல் பிரபஞ்சத்திலே விழிப்பதென்னை?

*விடை* : 23. பிராரத்தசேஷத்தினால்.

இப்படித் தத்துவவிவேகத்தைப் பலப்பட விசாரம் பண்ணி மனதைச் சமாதியில் லயம்பண்ணிச் சகலசம் சாரத்தையும் விட்டுப் பரப்பிரஹ்ம மாகலாமென்று தத்துவ விவேகஞ் சொல்லுகிறது.

முதலாவது தத்துவவிவேகம் முற்றிற்று.

ஆக வினா விடைகள் : 23.

---

## இரண்டாவது பஞ்சபூத விவேகம்

சிருஷ்டிக்குமுன் சத்தாகவே இத்தனையு மிருந்த தென்னும் சாமவேதார்த்தத்தைப் பஞ்சபூத விவேகத் தினால் வெளிப்படுத்துகின்றார்.

*வினா* : 1. சத்தென்று சொல்லப்பட்டது யாது? இத் தனையுமென்று சொல்லப்பட்டது யாது?

விடை : 1. சத்தென்று சொல்லப்பட்டது அத்வைதப் பிரஹ்மம். இத்தனையுமென்று சொல்லப்பட்டது பஞ்ச பூதமும், அவற்றின் குணங்கள் ஐந்தும், அவற்றை யறியும் இந்திரியங்கள் ஐந்தும், அவற்றிற்குச் சகாயமா யிருக்கும் இந்திரியங்கள் ஐந்தும். அந்தக்கரணமொன்றும் நானென்னும் ஒருவனுமாம்.

வினா : 2. இந்தப் பூதம் ஐந்தனுள் ஒவ்வொரு பூதத் திற்கும் எத்தனை யெத்தனை குணங்கள் உண்டு.

விடை : 2 ஆகாசத்திற்குக் குணம் ஒன்றும், வாயு விற்குக் குணம் இரண்டும், அக்கினிக்குக் குணம் மூன்றும் அப்புவிற்குக் குணம் நான்கும், பிருதிவிக்குக் குணம் ஐந்துமாம்.

வினா : 3 இந்தப் பூதங்களில் இந்தக் குணங்களைப் பகுத்துக் காண்பதெப்படி?

விடை : 3 பிரதித் தொனியொன்றே ஆகாசத்தின் குணம்; சீறு சீறென்னும் சத்தமும், சீதோஷ்ண கடினங் கட்கு விலட்சணமான பரிசமும் வாயுவின் குணம்; புகு புகென்றொலிக்கும் சத்தமும், உஷ்ணபரிசமும், பிரகாச மென்னும் ரூபமும் அக்கினியின் குணம்; குளுகுளு வென்னும் சத்தமும், சயித்திய பரிசமும், சுக்கிலரூபமும், மதுர ரசமும் அப்புவின் குணம்; கடகடவென்னுஞ் சத்தமும், கடின பரிசமும். பஞ்சவர்ண ரூபமும், அறுசுவை ரசமும், நற்கந்த துர்க்கந்தமும் பிருதிவியின் குணம்.

வினா : 4. இதற்குப் பிரமாணம் யாது?

விடை : 4. சுரோத்திராதி ஞானேந்திரியங்களால் அநுபவிப்பதே பிரமாணம்.

வினா : 5. இந்திரியங்களுக்கிப்படி வெளிநாட்ட மாத் திரமோ? உண்ணாட்டமும் உண்டோ?

விடை : 5. செவியை அங்குலியினால் மூடின் உள்ளி ரைச்சல் கேட்கப்படுதலாலும், குடிக்கையிற் புசிக்கையிற்

சீதோஷ்ணபரிசம் அறியப்படுதலாலும், கண்ணை மூடின விடத்து உள்ளிருளாகிய ரூபந்தோற்றுதலாலும், வாந்தி பண்ணும்போது ரசங்களை அறிதலாலும், ஏப்பம் விடும் போது நற்கந்த துர்க்கந்தங்களை யறிதலாலும் உண் ணாட்டமும் உண்டு.

*வினா* : 6 இதற்குச் சகாயமான விந்திரியம் யாது? அதற்குத் தொழில் யாது?

*விடை* : 6 வாக்காதி சகாயவிந்திரியம், வசனாதி தொழில்.

*வினா* : 7. அந்தரிந்திரியமான மனதும் அதன் றொழிலும் எவை?

*விடை* : 7. பத்திந்திரியங்கட்கு மிராஜாவாய், இந் திரியத்தின் வழியே குணதோஷம் விசாரிப்பதாய் இருதய கமலத்தின் நடுவே யிருப்பது மனது. வைராக்கியம் சமை முதலான சாத்வீகப் பிரவிருத்தியும், காமக்குரோத முதலான ராஜதப் பிரவிருத்தியும், சோம்பல் நித்திரை முதலான தாமதப் பிரவிருத்தியும் இதன் தொழில்கள்.

*வினா* : 8. இந்த மூன்றுவகைப் பிரவிருத்திக்கும் பலன் யாது?

*விடை* : 8. சாத்வீகத்தில் புண்ணியம் உண்டாம், ராசதத்தில் பாவம் உண்டாம், தாமதத்தில் இருவகையு மற்று வீண்காலம் போம்.

*வினா* : 9. இப்படிப் பதினொரு இந்திரியத்தினா லும் யுத்தியினாலும் சாஸ்திரத்தினாலும் அறியப்படுகிற சகலசகத்தும்சத்தே யென்பது கூடுமா?

*விடை* : 9. விஜாதீயம், ஸஜாதீயம், சுவகத மென் னும் மூன்று பேதமும் அற்றது சத்தேயாம்.

*வினா* : 10. விஜாதீய ஸஜாதீய ஸ்வகதபேதங்கள் எவை?

*விடை* : 10. மரத்திற்குக் கல் விஜாதீயம்; வேறு மரம் ஸஜாதீயம்; இலை பூ காய் ஸ்வகதம். இப்படிச் சத்திற்குச் சகத்து விஜாதீயமென்ன லாகாது; அசத்தில் லாமையினால். சத்திற்குச் சகத்து ஸஜாதீயமென்ன லாகாது; வேறு சத்தில்லாமையினால் ஸ்வகதபேத மென்னலாகாது; நிரவயமாயிருத்தலால். இவையெல்லாம் சத்தே.

*வினா* : 11. அது கூடாது, எல்லாம் அசத்தாகவே முன்னிருந்தது.

*விடை* : 11. சூரியன் அந்தகாரத்துடனே கூடியும் இரான்; அவன் அந்தக்காரமும் அல்லலென்பதுபோல; சகத்து முன் அசத்தா யிருந்ததானாற் சத்துடன் கூடியும் இராது; சத்தாகவு மாட்டாது.

*வினா* : 12. சத்தைத் தவிர வொன்று மில்லாவிட்டாற் சிருஷ்டிக்கு முன்னெல்லாஞ் சத்தா யிருந்ததென்று வேத வாக்கியஞ் சொல்லுவதென்னை ?

*விடை* : 12. காலவாசனையுடன் கூடியிருக்கும் சிஷ்யனைக் குறித்துச் சொன்னதே யல்லாமல் உண்மை யல்ல. ஆகையினாற் சங்கையும், உத்தரமும், துவைதத் திலன்றி அத்வைதத்தில் இல்லை.

*வினா* : 13. அறியாமையினாற் சங்கித்தேன்; உண்மை யாது?

*விடை* : 13. அசையாமல் கெம்பீரமாய்ப் பிரபையும் அல்லாமல் அந்தகாரமும் அல்லாமல் அவாங்மானச கோசரமாயிருக்கும் பிரஹ்மமே சத்தாம்.

*வினா* : 14. பிருதிவி முதலியன பரமாணுவாய்ப் போனமையினால் இல்லையென்பது சம்மதித்தேன்; பிரள யத்தில் ஆகாசமும் இல்லாமற் போமென்பது கூடாது.

*விடை* : 14. அத்தியந்தம் நிர்ச்சகத்தாயிருக்கிற ஆகாசம் உன் புத்தியில் பட்டதுபோல நிராகாசமா யிருக்கும் சத்து எங்கள் புத்தியில் படும்.

*வினா* : 15. சத்தாயிருக்கும் சுத்த சைதன்னியத்தை எப்போது அநுபவித்தீர் ?

*விடை* : 15. நிர்ச்சிந்தனையா யிருக்கிற வேளையில் அநுபவித்தோம்.

*வினா* : 16. அப்போது சத்தென்னும் புத்தியும் இல்லையே ?

*வினா* : 16. அது நமக்குச் சம்மதந்தான். நிர்ப்புத்தியாயிருக்கிற அவஸ்தைக்குச் சாக்ஷிமாத்திரமாக விருந்தோமென்னும் அநுபவமே போதும், ஆகையினால் மனோ விவகாரமற்ற வேளையில் சாக்ஷிமாத்திரமாக விருப்பது போல மாயா விருத்திக்கு முன்னும் சத்திருக்கு மென்றறிக.

*வினா* : 17. இந்த மாயைக்கு லக்ஷணம் யாது?

*விடை* : 17. சத்துமல்லாமல், அசத்துமல்லாமல், உற்றுப்பார்த்தால் இல்லாமற் போவதே லக்ஷணம்.

*வினா* : 18. சத்தைவிட மாயாசக்தி யில்லாவிடின் அசத்தென்னும் லக்ஷணம் இருக்கட்டுமே?

*விடை* : 18. அசத்து மாயா காரியமல்லாமற் சொரூபமல்ல. ஆதலால், கடசக்தி மண்ணிலிருக்கினும், ஏகதேசமாக விருப்பதுபோல மாயாசத்தியும் பிரஹ்மத்தினிடத்தில் ஏகதேசமாக விருக்கும்.

*வினா* : 19. பிரஹ்மத்திலுள்ள மாயை என்ன செய்யும்?

*விடை* : 19. சுவரைப்பற்றியுள்ள வர்ணம் சுவரில் பலவித சித்திரங்களைக் கற்பிப்பது போலப் பிரஹ்மத்தைப்

பற்றியுள்ள மாயையும் நிருவிகாரத்தில் விகாரத்தைக் கற்பிக்கும்.

*வினா* : 20. மாயையினாற் கற்பிக்கப்பட்ட விகாரங்கள் எவை?

*விடை* : 20. முந்திய விகாரம் ஆகாசம்; அதற்கு லக்ஷணம் அவகாசம்.

*வினா* : 21. சத்திற்குச் சுபாவம் எத்தனை? ஆகாசத்திற்குச் சுபாவம் எத்தனை?

*விடை* : 21. உண்டென்பது மாத்திரமே சத்தின் சுபாவம். உண்டென்பதுவும், சத்தமு மாகாசத்தின் சுபாவம். சத்திலே சத்தமில்லை. சத்துஞ் சத்தமு மாகாசத்தின் சுபாவம்.

*வினா* : 22. சத்தே ஆகாசமானால், சத்தின்குண மாகாசமென்று சொல்லவேண்டுமே யல்லாமல், ஆகாசத்தின் குணம் சத்தென்று வாதிகள் சொல்லுவதென்னை?

*விடை* : 22. பிரஹ்மத்தினிடத்தில் ஆகாசத்தைக் கற்பித்த மாயை குண குணிகளையுந் தாறுமாறாகத் திருப்பி வைத்தது. அப்படிப் பிரமிப்பிப்பது மாயைக்குச் சுபாவம்.

*வினா* : 23. இது தெளியும் வழி யாது ?

*விடை* : 23. வேதாந்த விசாரம் பண்ணினால், சத்தினிடத்தில் ஆகாசங் கற்பிதமாதலாற் சத்துப் பிரதானமாகவும், ஆகாசம் அப்பிரதானமாகவும் அறியப்படும்.

*வினா* : 24. சத்தினும் புறம்பாயுள்ள ஆகாசத்தை யசத்தென்றறிவது எப்படி ?

*விடை* : 24. ஆகாச முண்டென்னு மிடத்தில், உண்டென்னும் சொல்லினாலும், விவேகித்துப் பார்த்தால் காட்டப்பட்ட பொருளைத் தவிர ஆகாசம் இல்லாமையினாலும் ஆகாசம் அசத்தே யென்றறிக.

*வினா* : 25. விசாரம் யாது ?

*விடை* : 25. சத்தென்னுஞ் சத்தமும் ஆகாசமென்னுஞ் சத்தமும் பரியாயமல்ல. வாயுவாதிகளில் சத்தானது கலந்திருக்கிறது; ஆகாசம் அப்படிக் கலந்திருக்கவில்லை. ஆதலால் ஆகாசம் மித்தை யென்பதே விசாரம்.

*வினா* : 26. ஆகாசந் தோற்றுதலால் இல்லையென்பது எப்படி ?

*விடை* : 26. எவை சத்துக்கு வேறாக அசத்தாக விருந்து தோற்றுகின்றனவோ அவை யாவும் சொப்பன கஜ முதலியவற்றைப்போல மித்தையாம்.

*வினா* : 27. இப்படி ஆகாசத்தில் சத்தையும் சத்தத்தையும் பிரித்துக் காணுங்கால் ஆகாசம் மித்தை யாவதென்னை?

*விடை* : 27. கற்பிதமான மாயாகாரிய மாகலின் காரணம்போல மித்தையாக வகுப்பற்றது.

*வினா* : 28. பொய்யாயுள்ள ஆகாசமும், மெய்யாயுள்ள சத்தும் ஏகமாகப் பொருந்தி எல்லோருக்குந் தோற்றுதலாற் பிரித்துக் காணும் வழி யாது?

*விடை* : 28. ஜாதிவியக்திகள் போலவும், குணத்திரவியங்கள் போலவும், உடலும் உயிரும்போலவும் சத்தும் ஆகாசமும் வேறென்றறி.

*வினா* : 29. இப்படி யறிந்தாலும் சத்தும் ஆகாசமும் வேறென்று அறியப்படாது எதனால்?

*விடை* : 29. பூர்வம் புத்தி யேகாக்கிர மாகாமையினாலும், சந்தேகத்தினாலும் ஏறவில்லை. சாவதானமாய்ப் பிரமாண மூலமாய் விசாரித்தால் ஏறும்.

*வினா* : 30. விசாரித்தவனுக்குப் புத்தியில் எப்படியிருக்கும்?

விடை 30. சத்தாயிருக்கும் வஸ்து அகண்டமென்றும், ஆகாசம் பரிச்சின்ன மாகலின் மித்தையென்றும் புத்தியில் திடப்பட்டிருக்கும்.

வினா : 31. இப்படி யறிந்தவன் உலகத்தாருடன் யெப்படிப் பேசுவான்?

விடை : 31. சத்தையே ஆகாசமென்றுபேசுகிறவனையும் ஆகாசஞ் சின்மாத்திரமென்று பேசாதவனையுங் கண்டவுடன் ஆச்சரியப்படுவன்?

வினா : 32. இப்படி ஆகாசம் மித்தையென்றும், சின்மாத்திரமே சத்தியமென்றும் பிரித்தறிந்தபின் செய்காரியம் யாது?

விடை : 32. இந்த ஞானத்தின்படி வாயு முதலான பூதங்களினும், சத்து பரிபூரணமாதலால் எங்கும் காணப்படுமென்றும், ஆகாசாதிகள் பரிச்சின்ன மாகலின் எங்கும் காணப்படவில்லை யென்றும், பூதங்களெல்லா மித்தையென்றுந் திடப்படுத்த வேண்டும்.

வினா : 33 பூதங்கள் பரிச்சின்னமா? எப்படிக் காணப்படுகின்றன? பூதங்கட்குச் சுபாவகுணம் யாது? அன்னிய குணம் யாது?

விடை : 33. சத்தில் ஏகதேச கற்பிதம் மாயை, மாயையில் ஏகதேசகற்பிதம் ஆகாசம், ஆகாசத்தினிடத்தில் ஏகதேச கற்பிதம் வாயு. வாயு வுண்டென்பது சத்தின் அம்சம், சத்தை விட்டுப்பார்த்தால் வாயு காணாமற் போவது மாயையின் அம்சம், சத்தம் ஆகாசத்தின் அம்சம் ஆக இம்மூன்றும் வாயுவிற்குக் காரண குணம், சுபாவகுணம் பரிசம். இத்தனையுஞ் சத்தைப் பகுத்தாற் காணாமற் போவதனால் வாயு மித்தை.

வினா : 34 இப்படி வாயு மித்தையென்று அறிந்தபின் செய்காரியம் யாது?

*விடை* : 34. வாயுவிற் பத்தி லொன்றாய்க் கற்பிக்கப்பட்ட அக்கினியும் மித்தை யென்றே காணவேண்டும். அக்கினியுண்டென்பது சத்தின் அம்சம், சத்தைவிட்டுப் பார்த்தால் இல்லாமற் போவது மாயையின் அம்சம், சத்தம் ஆகாசத்தின் அம்சம், பரிசம் வாயுவின் அம்சம், ஆகக் காரண குணம் நான்கு. சுபாவ குணம் ரூபம். இத்தனையுஞ் சத்தைத் தவிர வேறல்லவென்று காணும் வாசனை பண்ணவேண்டும்.

*வினா* : 35. இப்படி யக்கினியுமித்தையென்று அறிந்தபின் செய்காரியம் யாது?

*விடை* : 35 அக்கினியிற் பத்திலொன்று கற்பிதம் அப்பு. அப்புவிற்கு ரசத்துடன் ஆறு குண முண்டு, அப்புவிற்பத்திலொன்று கற்பிதம் பிருதிவி, பிருதிவிக்குக் கந்தத்துடன் ஏழு குண முண்டு, பிருதிவியிற் பத்திலொன்று கற்பிதம் பிரஹ்மாண்டம், பிரஹ்மாண்டத்திற் கற்பிதம் புவனங்கள். புவனங்களிற் கற்பிதம் சரீரங்கள். இவ்வாறு அறிந்து சத்தைவிட்டுப் பார்த்தால் இவ்வெல்லாவற்றிற்கும் சொரூபமில்லாமையினாற் சின்மாத்திரமாமென்று காண்பதே செய்காரியம்.

*வினா* : 36. இப்படித்துவைதம் யாவும் மாயா கற்பிதமென்றனாதரவு பண்ணினாற் றோஷமில்லையோ?

*விடை* : 36. சகத் பேதத்தை நித்திய மென்று நிச்சய புத்திபண்ணி, அத்வைதத்தை யனாதரவுபண்ணின சாங்கியன், கணாதன், பௌத்தன் முதலாயினோருக்குப் பிரத்தியவாய மில்லையெனில், மாயாகற்பிதமா யிருக்கும் துவைதத்தை யனாதரவு பண்ணியிருக்கும் நமக்குப் பிரத்தியவாயம் லேசமுமில்லை.

*வினா* : 37. இப்படித் துவைதத்தை யனாதரவு பண்ணினாற் பிரயோசனம் யாது?

*விடை* : 37. துவைதத்தை அனாதரவு பண்ணினாலத்வைதத்தில் பத்தி திடப்பட்டுச் சீவன்முத்தனாகலாம்.

*வினா* : 38. இப்படிச் சத்தையும், அசத்தையும் பகுத்தறிந்தால் சீவன்முத்தி யெப்போது வரும்?

*விடை* : 38. திடப்படவறிந்த வன்றே முத்தியாம்.

*வினா* : 39. பிராணன் விடும்போ தந்தநிலை வர வேண்டாமோ?

*விடை* : 39. தினந்தோறும் கற்றபோதம் சொப்பன சுழுத்தி யவஸ்தைகளில் மறந்திருந்தாலும் சாக்கிரோதயத்தில் தானாக முன்னிற்பதுபோலப் பிராணன் போகும் மூர்ச்சையில் மறந்திருந்தாலும் ஞானம் போகாது.

*வினா* : 40. கற்றபோதம் மற்றெதனாற் போம்

*விடை* : 40. வேதாந்தத்திற்கு மேற்பட்ட பிரமாண மொன்றுண்டானா லதனாற் போகுமேயல்லாற் சுழுத்தி மூர்ச்சைகளில் போகாது. ஆதலா லத்வைத ஞானத்திற்கெதனாலும் வாதையில்லை.

ஆனால் இந்தப்பஞ்சபூத விவேகத்தை விசாரம் பண்ணிச் சகல பிரபஞ்சத்தையுஞ் சின்மாத்திரமாய்க் கண்டு அத்வைத நிலைபெற்றவனே சிவன்முத்தன். இந்தப் பிரஹ்மாகார நிலை பெற்றவனை யெம்மோகமும் கிட்டாதென்று பகவானும் கீதையில் சொல்லியிருக்கிறார்.

இரண்டாவது பஞ்சபூதவிவேகம் முற்றிற்று

ஆக வினா விடைகள் 40.

---

## மூன்றாவது பஞ்சகோசவிவேகம்

ஸ்ரீ வித்தியாரண்ணிய ஸ்வாமிகள், ஏழைகளிடத்திற் கிருபையினால் பஞ்சகோசவிவேகத்தினா வெளிதாய்ப் பிரஹ்மத்தைய றிவிக்கின்றார் :-

*வினா* : 1. தைத்திரீய மென்னும் உபநிஷத்தில் குகைக்குள்ளிருக்கும் பிரஹ்மத்தை யறிந்தால் முத்தி யுண்டென்று சொன்னதற் கர்த்தம் யாது?

*விடை* : 1. தேகத்திற்குட்பட்டது பிராணன்; பிராண னுக்குட்பட்டது. மனம்; மனத்திற் குட்பட்டது விஞ்ஞானம். விஞ்ஞானத்திற்குட்பட்டது ஆநந்தம். இவ்வைந்தும் குகை. இவற்றிற் கன்னியமாயிருப்பது ஆத்மா.

*வினா* : 2. இவ்வைந்தையுமே யாத்மாவென்று சகல வாதிகளும் இலௌகிகருஞ் சொல்லுதலால், இவற்றைத் தள்ளுவதெப்படி?

*விடை* : 2. பிதா புசித்த அன்னவீரியத்தினா லுண் டாகுதலாலும், அன்னத்தினால் விருத்தியாகுதலாலும் அன்னமயமான சரீரத்தைத் தானென்னலாகாது. தேகத் திற்குள் ளிருக்கின்ற விந்திரியங்களை யேவுகின்ற வனாய்ப் பலதாரதம்மியத்தினாற் றிரிசியமாயிருக்கும் பிராணமயனையுந் தானென்னலாகாது. தேகத்திலே நானென்னும் புத்தியையும் வீடு மாடுகளில் எனதென்னும் வபிமானத்தையும் பண்ணிக்கொண்டு காமக்குரோத முதலான வவஸ்தைகளி லுழலக்கண்ட மனோமயனையுந் தானென்னலாகாது; காய்ச்சின விரும்பி னுண்டைபோலச் சாக்கிரத்தில் நகசிகைபரியந்தங் கலந்துநின்று சுழுத்தியி லணைந்துபோகும் விஞ்ஞானமயனையுந் தானென்னலா காது, புண்ணிய போகத்திலுஞ் சுழுத்தியிலும் அந்தர் முகமா யாநந்தப்பிரதிவிம்பத்துடன் கூடிக்கணப்போதில் நஷ்டமாய்ப்போகின்ற வாநந்தமயனையுந் தானென்ன லாகாது.

*வினா* : 3. இப்படி யிவ்வைந்தும் ஆத்மாவல்ல வெனின் இவற்றிற்கன்னியமாக ஆத்மா வேறு காணப்பட வில்லையே?

*விடை* : 3. பஞ்சகோசங்களையும் அவற்றிற்குச் சொன்ன லக்ஷணத்துடன் தோற்றுவித்து அப்பா லினி

யொன்றுங்காணோமென் றிருக்கும் பிம்ப சைதன்னியமே ஆத்மா.

*வினா* : 4. இந்தப் பஞ்சகோசங்களை ஆத்மாகாணின் ஆத்மாவைக் காண்பவரார்?

*விடை* : 4. சுதசித்த சைதன்னியமாயிருக்கும் ஆத்மா சடங்களையெல்லா மறிபவர். தாம் சடமாகாமையினால் எதனாலு மறியப்படார்.

*வினா* : 5. அறிவாயிருந்தும் எதனாலுமறியப்படாத போது ஆத்மா அறிவென்ப தெப்படி?

*விடை* : 5. வெல்லத்திற்குத் தன்னுடைய ரசந் தன்னா லநுபவிக்கப்படா திருந்தாலும் அன்னியமாயி-ருக்கிற இந்திரியங்களினா லநுபவிக்கப்படுவதனால், மதுரஞ் சுபாவமென்றது போலச் சகலத்தையு மறிகின்ற ஆத்மாவிற்குத் தான் அறிவென்பதற்குச் சந்தேகமில்லை.

*வினா* : 6. அறியப்பட்டது பிரஹ்மமோ? அறியப் படாதது பிரஹ்மமோ?

*விடை* : 6 இந்த விருவகையுமல்ல, இதற்கப்பாற்பட் டது பிரஹ்மம்.

*வினா* : 7. இப்படியிருந்தாலவரையறிவ தெப்படி?

*விடை* : 7. எனக்கு நாக்குண்டோ இல்லையோ வென்னும் சொற்போல அறிவாயிருந்தும், அறிவெப்படி யிருக்குமென்று கேட்டவனக்கு லச்சையில்லையா?

*வினா* : 8. அஞ்ஞானியாயிருக்கிறவனுக்குப் பிரஹ்ம நிச்சயம் வருவதெப்படி?

*விடை* : 8. அறிவினாற் காண்பிக்கப்பட்டவையாவும் சடமாய்ப் போனாலும் நித்தியபோதமாயிருக்கும் அறிவே பிரஹ்மமென்று காணவேண்டும்.

வினா : 9. இந்த அறிவாயிருக்கும் ஆத்மாவேபிரஹ்மமானால் சச்சிதாநந்த மென்னும் லக்ஷணத்தில் சித்தில்லாத லக்ஷணத்தை யேன் சொல்லவில்லை?

விடை : 9. இப்படியறிவாயிருக்கிறதான் எப்போதுமுண்டென்றிருத்தலானும், ஒருகாலத்திலுமில்லை யென்றாகாமையினாலும் ஆத்மா சத்தென்பதுகூடும்; மாயா கற்பிதமாயுள்ள காலதேச வஸ்துக்களை யாத்மா கடந்த பொருளானபடியினா விம்மூன்றினாலும் வாதையற்றது ஆநந்தமென்பது கூடும்.

வினா : 10. இவ்வாத்மா எத்தன்மையர் ?

விடை : 10. இந்திரியங்கட்கு விஷய மாகாமையினால் இத்தன்மையரென்று சொல்லலாகாது; தானாகவிருத்தலால் அத்தன்மையரென்று பரோக்ஷமாகவுஞ் சொல்லலாகாது. இப்படி யிருதன்மையாகவும் சொல்லப் படாதவரே ஆத்மா.

வினா : 11. இப்படி நிர்ணயமானால் இவன் சீவன், இவன் ஈசுரனென்றும், இரண்டற்கும் மஹாவாக்கியத்தினால் ஐக்கியம் வந்தால் மோக்ஷமாமென்றுஞ் சொன்ன வேதவாக்கிய மெப்படிக்கூடும்?

விடை : 11. ஒரு புருஷனுக்குப் புத்திர பௌத்திராதிகளைக் குறித்துத் தகப்பன் பாட்டனென்று வந்த இரண்டு நாமமும், அந்த வுபாதிக ளில்லாவிட்டா லில்லாமற்போவதுபோல மாயையவித்தையென்னப்பட்ட இரண்டுபாதிகளாலும் ஈசுவரனென்றும், சீவனென்றுஞ் சொல்லப்பட்டது. ஒரு பிரஹ்மத்தைத்தானே உபாதி மித்தையென் றறிந்தவுடன் சீவனுமல்ல, ஈசுரனுமல்ல, நாம் பிரஹ்மமே யென்றல் பொருந்தும்.

வினா : 12. இத்தன்மைய ஞானத்திற்குப் பலன் யாது?

*விடை :* 12. இப்படி யாத்மாவே பிரஹ்மமென்று பஞ்சகோச விவேகத்தினாற் பகுத்தறிகிறவன் தானாக விருக்கும் பிரஹ்மத்திற்குச் சம்சாரமில்லையென்றும் வேதவாக்கியத்தின்படி முத்தனாய்ப் பிரஹ்மமாகவேயிருப் பன். இவனைக் காலத்திரயத்திலும் சம்சாரந் தொட ராது. இதுவே பலன்.

*மூன்றாவது பஞ்சகோசவிவேகம் முற்றிற்று*

ஆக வினாவிடைகள் 12.

---

## நான்காவது துவைதவிவேகம்

ஸ்ரீ வித்தியாரண்ணிய ஸ்வாமிகள் லோகாநுக்கிரக நிமித்தமாய்த் துவைதவிவேகம் சொல்லுகின்றார்.

*வினா :* 1. துவைத மெத்தனைவிதமாயிருக்கும்?

*விடை :* 1. ஈசுரனாற் சிருஷ்டிக்கப்பட்டதுவைதமென் றும், சீவனாற்சிருஷ்டிக்கப்பட்ட துவைதமென்றும் இரண்டுவிதமாக விருக்கும். இதனிற் பஞ்சீகரணம் பண்-ணின ஸ்தூலபூத பௌதிகபரியந்த முண்டான தத்துவ மெல்லாம் ஈசுவரசிருஷ்டியென்று சொல்லப்படும்; அதற்கு மேற்பட்ட சாக்கிரமுதல் சிவன் முத்திபரியந்தமுள்ள அவஸ்தைகளின் கற்பனையும், அந்தந்த அவஸ்தையில் உள்ள ஜாதிவர்ணாச்சிரம லௌகிக முறைமை முதலான சகல கற்பனைகளும் சீவசிருஷ்டியென்று சொல்லப்படும்.

இவைகளும் ஈசுவர கற்பனையானாலும் பிதாவினா-லுண்டாக்கப்பட்ட பெண், அன்னியனாய் வந்த போக பர்த்தாவுக்கு போக கற்பனைக்கிடமானாற்போல நல்லது பொல்லாததென்று போக கற்பனைக்கே யிடமாயின. ஆகையா விலையெல்லாம் சீவசிருஷ்டியென்று சொல்லப் படும்.

*வினா* : 2. ஈசுரகாரியமும் சீவனுடைய போகமும் ஈசுர சிருஷ்டியென்றும், சொல்வதெப்படி?

*விடை* : 2. ஈசுரனாற் சிருஷ்டிக்கப்பட்ட மண், பொன் பெண் முதலானவைகளினால் இதுவெனக்கப்பட்டதென்று ஒருவன் சந்தோஷிக்கிறான். இதுவெனக்கப் படாமற் போயிற்றென்று ஒருவன்கிலேசிக்கிறான் விரத்திவந்தவன் உபேக்ஷையாயிருக்கிறான். இப்படிப்பிரியம் அப்பிரியம் உபேக்ஷையென்று மண் முதலானவைகளில் காணப் படுகிற மூன்றகங்காரங்களும் அற்றுத் தன் சுபாவத்தி லிருந்ததே ஈசுவரசிருஷ்டி, மாதா சகோதரி பாரியென்று வெகுவிதாகாரமாகத் தோற்றும் ஒரு பிண்டமோசுவர சிருஷ்டி அதைக்குறித் துண்டான அநேகாகாரங்களும் அந்த வாகாரத்திற்கேற்ப அவனவன் மனதில் சங்கற் பித்த சமுசாரமுஞ் சீவசிருஷ்டியென் றறிக.

*வினா* : 3. பிராந்தியினாலுஞ் சொப்பனத்தினாலும் மனோராச்சியமாகக் கற்பிக்கப்பட்ட அந்தக்கரண கற்பனையெல்லாம் சீவசிருஷ்டியாகும். சாக்கிரத்தில் பிரமாணத்தினாற் பிரமாதாவினால் அறியப்பட்ட பிர மேயங்களெல்லாம் சீவசிருஷ்டியென்பது கூடாது.

*விடை* : 3. உலகத்திலே சகலபதார்த்தங்களையுந் தோற்றுவிக்கும் வெய்யில் அந்தப் பதார்த்தத்தின் பேரில் விழுந்து அவைகளை யாவரித்து அந்தப்பதார்த்தத்தை யடைந்து அவற்றைத் தோற்றுவிப்பதுபோல, சாக்கிரத் தில்* பிரமாதாவிடத்தினின்று முண்டான பிரமாணம் பிரமேயங்களை யடைந்து அவற்றினாகாரமாய் அவற்றி னஞ்ஞானத்தைத்தள்ளி அவற்றைத் தோற்றுவித்தலா லிப்படிச் சங்கற்பிக்கப்பட்ட சித்தவிருத்திப் பிரபஞ்ச மெல்லாம் சீவசிருஷ்டியே யல்லாமல் ஈசுவரசிருஷ்டி

* பிரமாதா என்றது - அந்தக்கரணம். பிரமாணம் என்றது அந்தக்கரணத்தின்விருத்தி, பிரமேயம் என்றது கடாதி.

யென்று சொல்லலாகாது. இது சித்தாந்தமாயின் பார்க்கின்ற விஷயங்களெல்லாம் ஈசுவர சிருஷ்டியும் சீவசிருஷ்டியுமாகக் கூடி இரண்டிரண்டாகவிருக்கும். அதில் ஈசுவர சிருஷ்டியான விஷயம், சிதாபாசனாலறியப்படும். சீவ சிருஷ்டியான விஷயம், சாக்ஷிஞானத்தினாற் பிரகாசிக்கப் படும். இப்படி ஈசுவர சிருஷ்டியும், சீவசிருஷ்டியும், பிரிபட்டுத் தோற்றினவுடனே சீவசிருஷ்டியைத் துடைத்தடக்க வேண்டும். அதுவே மனோநாசமென்றும், வாசனாக்ஷய மென்றும், சீவன் முத்திவருகிறதற்குச் சாதனமாகச் சொல்லப்படும்.

*வினா* : 4. ஈசுரசிருஷ்டி சீவன்முத்தி வந்தாலும் நாசப்படாமலிருப்பது போலச் சீவ சிருஷ்டியுமிருப்பதனாற் சாக்ஷியாயிருக்கும் நமக்குஹானி யாது?

*விடை* : 4. சுகதுக்காதி சம்சாரம் யாவும் சீவ சிருஷ்டி மூலமேயல்லாமல் ஈசுவரசிருஷ்டியினாற் சம்சாரம் அற்பமும் வருவதில்லை. இந்தவர்த்தத்தில் சம்சயமுண்டானால் அந்வயவெதிரேக யுத்தியினால் விளங்கச் செய்விக்கிறோம். அஃதெங்ஙனமெனின் ஈசுவர சிருஷ்டி யுளதானால் சம்சாரமுண்டு. ஈசுவரசிருஷ்டி யில்லையாயின் சம்சாரமில்லையென்பன அந்வய வெதிரேகயுத்தி. இரண்டும் ஒத்துவரவேண்டும். ஒத்துவராமல் எங்கேதடைபட்டதெனின் சமாதிசுழுத்தி முதலான வேளையிய் ஈசுவர சிருஷ்டியிருந்தும், ஒருவருக்கும் சுகதுக்காதிசம்சாரமில்லை. ஆகையால் அந்வய யுத்தி தட்டுப்பட்டது. பிரளயத்தில் ஈசுவரசிருஷ்டி யடங்கலும் வெதிரேகித்துப் போயிருக்கையிலும் ஒருவருக்கும் சீவன் முத்திவராமையினால் வெதிரேக யுத்தி தட்டுப்பட்டது. ஆகையால் ஈசுவரசிருஷ்டி சம்சாரத்திற்கு மூலமென்ன லாகாது. சீவசிருஷ்டியே சம்சாரத்திற்கு மூலமென்பது அந்வயம். சீவசிருஷ்டியொழிந்த விடத்தில் சம்சார

மில்லையென்பது வெதிரேகம். இந்த விரண்டும் ஒத்து வந்ததே பிரமாணம். அஃதெங்ஙனமெனின், ஈசுவர சிருஷ்டியான வெளிப்பிரபஞ்ச மொழிந்திருக்கையிலும் சொப்பனத்தில் சீவசிருஷ்டி அந்வயித்ததனால் சுகதுக் காதி சம்சாரமும் அவ்விடத்தில் அந்வயிக்கக்கண்டோம், சமாதி சுழுத்தி முதலான வேளையில் ஈசுவரசிருஷ்டி யான பிரபஞ்சமிருக்கச் சீவசிருஷ்டியான வந்தக்கரண கற்பனை வெதிரேகித்ததனால் சுகதுக்காதி சம்சாரமும் வெதிரேகித்துக் காணப்பட்டது. ஆதலால் சீவசிருஷ்டியே சகலசம்சாரத்திற்கும் மூலமாம்.

*வினா* : 5. இரண்டு சிருஷ்டியுங்கூடி விளங்கும் சாக்கிராவஸ்தையில் சீவசிருஷ்டி யொழிந்தவனே சீவன் முத்தன் என்பதற்கு வேறு யுத்தி யாது?

*விடை* : 5. தன்கண்ணிற் காணாமற் றூரதேசத்தில் நெடுங்காலம்தன் பிள்ளையிறந்து போயிருக்க, நம்முடைய பிள்ளையிருக்கிறானென்னும் சீவசிருஷ்டி யிருந்து சுகத் தைக் கொடுத்தது. பின்னொருவன் வந்து உன்பிள்ளை செத்தானென்று சொல்லக்கேட்டு நம்முடைய பிள்ளையை இழந்தோமென்று சீவசிருஷ்டி மாறினவுடன் துக்கத்தைக் கொடுத்தது. அவன் செத்துப்போயிருக்குங் காலத்தும் அந்த வார்த்தையைக் கேளாமலிருந்த காலமெல்லாஞ் சீவசிருஷ்டியிருந்து சுகத்தைக் கொடுத்தது. அதலாற் சகலபிராணிகளையும் பந்தப்படுத்துவது அந்தக்கரணப் பிரபஞ்சமே யல்லாமல் ஈசுவரப்பிரஞ்சமல்ல. ஆதலால் அந்தக் கரணப்பிரபஞ்ச மாகிய சீவசிருஷ்டியைத் துடைத் தடக்க வேண்டும்.

*வினா* : 6. ஆனால் அந்தக் கரணப் பிரபஞ்சத்திற்கு முன்னிலையான மூலம், ஈசுவரசிருஷ்டி யாகலின் ஈசுவர சிருஷ்டியொழிந்த பின்னன்றோ அத்துவைதம் வர வேண்டும்?

விடை : 6. சீவர்களது யத்தியோகத்தினால் ஈசுவரப் பிரபஞ்சம் அழிக்கப்படுவதுமல்ல, சிருஷ்டிக்கப் படுவது மல்ல, ஈசுவர சங்கற்பத்தின்படி உண்டாகிறது. அவருடைய சங்கற்பத்தின்படி பிரளயத்தில் ஈசுவரசிருஷ்டி யாவுமொழிந்தவிடத்தும் அத்வைதம் ஒருவருக்குங் கூடாமையினால் சாஸ்திரமுதலியமோஷ சாதனங்களைக் கொண்டு ஈசுவரசிருஷ்டி நடக்கிற காலத்திலேயே அத்வை ஞானத்திற்கு விரோதியாயிருக்கிற சீவசிருஷ்டியை மாற்றி அத்வைதத்தைப் பெறலாம். ஆதலால் அது நமக்குச் சாதனமுமாம். அது நம்மால் அழிக்கப்படுவது மன்று, இப்படி ஈசுவரத் துவைதமும் ஜீவத்துவைதமும் சொல்லப்பட்டது. ஆதலால் ஈசுவர சிருஷ்டி நம்மால் லழிக்கப்படாததாம்.

வினா : 7. சீவத்வைதம் பந்தப்படுத்துவதாமாகலின் அது இத்தன்மையதென்றும், அதனையழிப்ப திவ்வாறென்றும், பிரமாண பூர்வகமாகச் சொல்லவேண்டும்.

விடை : 7. சாஸ்திரீயமென்றும் அசாஸ்திரீயமென்றும் சீவத்துவைதம் இரண்டு விதமாம். அவற்றில் சாஸ்திரீயமாவது, வேதாந்தசாஸ்திரஞ் சொன்னபடி கேட்டு மனதிலே நிர்ணயித்த தத்துவ சித்தாந்த யுத்திக் கிரம முதலிய அத்தக்கரணப் பிரபஞ்சமாம். அசாஸ்திரீயமாவது, சாஸ்திரத்தைக் கடந்து பிரபஞ்சத்தைப் பிரமாணமாகவெண்ணி அந்தக்கட்டின்படியே நிர்ணயிக்கின்ற அந்தக்கரணப் பிரபஞ்சமாம். இது தீவிரமென்றும் மந்தமென்றும் இருவகையாம். இவற்றில் காரியபரியந்தம் நடக்கும் காமக்குரோதாதிப் பிரபஞ்சம் தீவிரமென்று சொல்லப்படும். பிரவிருத்தியற்றுப் பிரபஞ்சத்தைக் குறித்துச் சங்கற்பிக்கும் மனோராச்சியப் பிரபஞ்மெல்லாம் மந்தமென்று சொல்லப்படும். இந்தவிருவகையினையும்ஞானம் வேண்டுமென்பவன் சிரவணத்திற்கு வருமுன்னே சாதனமப்பியசிக்கிற காலத்திலேயே தவிர்க்கவேண்டும்.

இல்லையாயின் கேள்வியில் சித்தம் ஒருமியாது. ஆனாற் கேள்வி முடியுமட்டும் நீங்கியிருந்து திடமான பிற்பாடா யினும் அசாஸ்திரீயப் பிரபஞ்சம் வரலாமோ? வரலாகாது. வந்தால் சீவன் முத்திகூடாது. ஆதியில் நீக்குவது ஞானத் திற்கும், அறிந்தபின் நீக்குவது சீவன் முத்திக்குமாம், ஆதலால் ஞானம் வந்தபின் அந்தக்கரணப் பிரபஞ்சத்தை நீக்காதிருந்தால் காமர்திப் பிரவிருத்தியில் முயன்று சுகதுக்காதிகளில் பந்தப்படுபவனுக்கு நிரந்தரம் நித்திய முத்தனாய் நிரதிச்யாநந்தாம யிருப்பவன் நானென்று நிற்காதுமறைபடுதலால் சீவன்முத்திகூடாது சீவன்முத்தி வேண்டியதில்லை, பிரஹ்ம சொரூபமான அவஸ்சாத்திரய சாக்ஷியே நாமென்று பிறித்தறிந்ததே முத்தியென்னும் சாஸ்திரமே போதுமெனின், இப்படி வந்ததனால் சந்தோஷிப்பவனானால் குருசந்நிதானத்தில் வேதாந்த சாஸ்திர சிரவணம் பண்ணின மாத்திரத்தால் சுவர்க்க முண்டென்னும் சாஸ்திரமே உனக்குப் போதும்.

*வினா* : 8. அசுராதியர் பீடைகளையும் புண்ணியம் குறைந்தெரிந்து விழுபவர்களையுங்கண்டு சுவர்க்கத்தி லிச்சையில்லை.

*விடை* : 8. எழுபத்தொரு சதுர்யுகர் ஆநந்தபோகம் புசிக்கும் சுவர்க்கத்திலெவ்வோர் காலத்தில் வரும் அசுர பீடையினைக்கண்டு, அதில் வெறுப்புவந்து சுவர்க்கம் வேண்டாமென்னும் உனக்கு அனந்தகோடி சனனமர ணாதி சம்சாரத்திற்கு மூலமான அந்தக்கரணப் பிரபஞ்சம் ஒழிந்து சீவன் முத்தியப்பியாசிக்க வேண்டுமென்பதும், இற்றைவரைகேட்ட வேதாந்த சாஸ்திரங்களுக்கெல்லாம் சாக்ஷியே நானென்னும் புத்திமாறாமலிருக்க வேண்டு மென்பதும், சரீராதிகளில்நானென்னும் புத்திவாராமல் கெடவேண்டுமென்பதும், அதனை முன்னிட்டபிரமானத் திற்கிடமான அகிலப்பிரபஞ்சத்தையும் மெய்யென்று

பாராமற்பொய்யென்று திடம்பண்ணவேண்டுமென்பதும் தாற்பரியமாகுதலால், இவ்வர்த்தத்தை விட்டு இதற்கு விபரீதமான அசுத்தபுத்தியைப்பண்ணிக்கொண்டு அசாஸ்திரீயப் பிரபஞ்சந் தவிரமாட்டேனெனின், அப்பியசித்த சாஸ்திரம் வாக்கிலேமாத்திரம் கிளிப்பிள்ளைக்குச் சரியாம் அசுத்தப் பிரவிருத்தியினால் தத்துவஞானியும் நாயுஞ் சரியென வரும். இவ்வளவு மாத்திரமன்று. முன்னாளிற்றை வரையும் சம்சாரத்திலே பந்தப்படுத்தினது தன்னந்தக்கரண தோஷமென்றே கருதி, இப்போது தத்துவஞான மப்பிய சித்துஞ் சீவன் முத்திவேண்டாம் அந்தக்கரணப் பிரபஞ்சத்தை கைவிடப்படாதெனின், இவன் கற்றஞானமென்ன செய்யும் அக்கிரமமென்ன வென் றெல்லாருடைய வந்தக்கரண தோஷத்தினாலும் பந்தப்படுவன். ஆதலால் அந்தக்கரண கற்பனையை நன்றாய் ஒழித்து சாக்ஷியே நானென்று நின்று அந்தக் கரணத்தைச் சாக்ஷியிலொடுக்கிச் சரீராதி சகல சம்சாரத்தையுமறந்து, சகல லோகத்திலும் பட்டணத்துப் பிள்ளையைப்போலப் பூசிக்கப்பெற்று, ஆநந்தாவரணத்தைத் தள்ளிச் சீவன்முத்தியாற் பரப்பிரஹ்மமாகலாம்.

*வினா* : 9. இப்படிச் சீவசிருஷ்டி பந்தப்படுத்துமானாற்றீவிரப்பிரபஞ்சத்தைக் கைவிடுவோம். காரியத்திற்குவாராதமந்தமிருப்பதனால் ஹானியாது ?

*விடை* : 9. மனோராச்சியம் சகல பிரபஞ்சவிருத்திக்குந்திடப்பட்ட வனுசந்தானமான பீஜமாதலால் ஜனன மரணத்திற்கு மூலமென்றறிந்து மனோராச்சியத்தை முன்னர் ஒழிக்க வேண்டும். இப்படி இரும்பைக்கொண்டிரும்பை அராவுவது போலச் சாஸ்திரீயப் பிரபஞ்சத்தைக் கொண்ட சாஸ்திரீயப் பிரபஞ்ச மிரண்டையுந் தள்ளிப் பின்பு பிணஞ்சுடுதடிபோலச் சாஸ்திரீயப் பிரபஞ்சமும் ஒழியத் தானே தானாய்த் திடப்பட்டதே சீவன் முத்தி.

இப்படிச் சாஸ்திரீய மசாஸ்திரீய மிரண்டையுந் தவிர்ந்து தானேதானாய் அலைச்சலற நின்றவிடம் சீவன் முத்தியாகலின் இந்தப் பிரகரணத்தில் ஜீவசிருஷ்டியை ஈசுவர சிருஷ்டியினின்றும் விவேசனம் பண்ணிக் காட்டப் பட்டதென்றறி.

*நான்காவது துவைதவிவேகம் முற்றிற்று*

ஆக வினா விடைகள் - 9

---

## ஐந்தாவது மஹாவாக்கிய விவேகம்

ஸ்ரீ வித்தியாரண்ணிய ஸ்வாமிகள், லோகோபகாரமாய் மஹாவாக்கிய விவேகஞ் சொல்லுகின்றார்:-

*வினா* : 1. மஹா வாக்கியமென்பது யாது?

*விடை* : 1. நாலுவேதங்களிலும் முடிந்த பொருளையே சொல்லும் நான்கு வாக்கியம் மஹாவாக்கியமாம்

*வினா* : 2. அதற்கர்த்தமெப்படி?

*விடை* : 2. ஞானவடிவாயிருப்பதே பிரஹ்மமென்று இருக்கு வேதஞ் சொல்லாநின்றது. நானே யந்தப் பிரஹ்மமென்று யசுர்வேதஞ் சொல்லாநின்றது. நீயதுவாகின்றாயென்று சாமவேதஞ் சொல்லாநின்றது. இந்த வாத்மாவே பிரஹ்மமென்று அதர்வண வேதஞ் சொல்லா நின்றது.

*வினா* : 3. இருக்குவேதத்திற் சொன்ன வர்த்தமெங்கேயிருக்கிறது?

*விடை* : 3. எவ்வறிவினால் சத்தமுதலான விஷயங்களறியப்படுகின்றனவோ அந்தப் போதமே பிரஹ்மம்.

*வினா* : 4. இத்தன்மைய பிரஹ்மமெத்தனையுண்டு?

*விடை* : 4. மும்மூர்த்திகண் முதலான தேவதைகளிடத்திலும்; மனிதர்மிருகமுதலிய விடங்களிலும் சைதன்னியமொன்றேயொழிய விரண்டில்லை.

*வினா* : 5. இப்படி முந்தியவாக்கியத்தினால் ஞான நிர்ணயமானால்; மற்ற மூன்று வாக்கியத்திற்கு மர்த்தம் யாது ?

*விடை* : 5. பரிபூரணமாயிருக்கும் பரமாத்மாவே இந்தத் தேகத்தில் புத்திக்குச்சாக்ஷியாயிருக்கும் சைதன்னியம். இப்படித்தானாகவிருக்கும் பிரஹ்மமே அஹமென்று யசுர்வேதஞ் சொல்லாநின்றது. சீவனுடைய தேகேந்திரியாதிகட் கப்பாற்பட்டிருக்கிற வஸ்து இந்தப் பிரஹ்மமாதலின், நீயே சகத்காரணப் பிரஹ்மமென்று சாமவேதஞ் சொல்லாநின்றது. இப்படிச்சுயம்பிரகாசமாகவிருக்கிறவாத்மாவே பிரஹ்மமாம். வேறன்றென்றதர்வணவேதஞ் சொல்லாநின்றது.

*ஐந்தாவது மஹாவாக்கிய விவேகம் முற்றிற்று*

ஆக வினா விடைகள்-5

---



